“பூங்கொடி” வெளியீடு:



# கைம்மை வெறுத்த காரிகை.



ஆசிரியர்,
S. சிவப்பிரகாசம்,
புதுவை.




இம்பீரியல் பிரஸ், புதுவை.

945 ஜூன்] [விலை அணா 3.

“பூங்கொடிப் பதிப்பகம்”
சேன்த் தெரேஸ் வீதி,
புதுச்சேரி

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் மாணவரும்,
சர்க்கார் பாடசாலைத் தமிழாசிரியருமான
தோழர், V. பொன்னம்பலம் அவர்கள் கூறிய

# சிறப்புரை.

என் நண்பர் S. சிவப்பிரகாசம் அவர்களும் யானும், புரட்சிக் கவிஞர் கனக—சுப்புரத்தினம் அவர்களிடம், ஒரு சேரத் தமிழ் பயின்றவராவோம். மற்றும் பலர் உண்டு அவரிடம் தமிழ் பயின்றவர்கள். அவர்களுள், தமிழாசிரியராக இருந்து வருபவர் பலர். செய்யுள் எழுதும் திறன் பெற்றவர்களும் பலர்.

நண்பர் சிவப்பிரகாசம் அவர்கள், எம் ஆசிரியரின் எளிய நடையைப் பின்பற்றிக் கவிதை எழுதும் ஆற்றல் பெற்றவர். இச்சிறு நூல், புறநானூற்றுச் செய்யுளொன்றின் விளக்கமாகும். நந் தமிழ் நாட்டில், கைம்மை என்னும் ஒரு தீய சட்டுப்பாடு இருந்துவருவதை யாவரும் அறிவர். அதனால், பெண்கள் சமூகம் சீரழிந்துவரும் நிலை பரிதபிக்கத் தக்கது. அக் கொடுமைகளை, இச் சிறு நூலில் நண்பர் நன்கு சித்திரித்துள்ளார். இத் தீய கட்டுப்பாடு நம் நாட்டை விட்டு ஒழிய வேண்டுவது மிகமிக அவசியமாகும்.

இதனைத் தமிழர்கள் ஆதரிப்பதன் மூலம், ஆசிரியர்க்கும் வெளியிடுவோர்க்கும், மேலும் பல நூற்கள் எழுதி வெளியிட ஊக்கந்தருவாராக!

1–6–45
புதுவை.

இங்ஙனம்,
V. பொன்னம்பலம்.

# ஆசிரியர் முன்னுரை.

விதவை யென்னும் ஓர் கொடுங் கட்டுப்பாடு, பழந் தமிழர்களிடையே இருந்ததா என்பதற்கு எவ்வித ஆதாரமுமில்லை. ஆனல், சங்க இலக்கியங்களெனக் கருதப் படும் புறநானூறு முதலிய தொகை நூற்களுள், அவ் விதவை நிலை குறிக்கும் செய்யுட்கள் சிலவுள. அவை, பிற்காலப் புலவர்களால் எழுதப்பட்டு, அத் தொகை நூற்களில் இடம் பெற்றன என்பதே அறிஞர் முடிபு.

கணவன் இறந்தபின் மனைவியைக் கைம்மைத் துயரில் ஆழ்த்துவது, ஆரியர் கண்ட முறையாகும். இதை, அவர்தம் நூற்களால் அறியலாம். அவ் ஆரியரின் பழக்க வழக்கங்களைத் தமதாகக்கொண்ட பிற்காலத் தமிழர்கள், அன்புள்ளம் இழந்து, அக் கொடுமையைத் தங்கள் பெண்கள்மீதும் சுமத்திவிட்டனர்.

பூதப்பாண்டியன் மனைவியாகிய பெருங்கோப் பெண்டு என்பாள், தன் கணவன் இறந்தது கண்டு சகியாது தீப்பாய்ந்தபோது, தடுத்தோர்க் கறிவுறுத்தியதாகவுள்ள புறப்பாட்டொன்றின் விளக்கமே இச் சிறு நூல். அப் பாட்டில், கைம்பெண் நிலை கூறப்பட்டிருக்கிறது. அதனை விளக்கிக் காட்டுவதற்காகவே, இதை எழுத முன் வந்தேன்.

இதில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சி, 'உடன் கட்டை ஏற்றுதல்' அல்ல. அது ஆரியரின் மிருகச் செயல்! எனினும், உடன்கட்டை ஏறுதலும், அத் தொடர்புபற்றி வந்ததேயாகும். கணவன் இறந்தபின் கைம்மை ஏற்காது, அக்கணவனுடன் இறப்பதே கற்பிற் சிறந்தார்க்கு அழகெனக் கற்பிக்கப்பட்டதன் விளைவாகும்.

காதலால் ஒன்றுபட்டுக் காதல் உரிமையோடு வாழ்பவர்கள், ஒருவரை யிழந்து ஒருவர் வாழ ஒருப்படார் என்பர். ஆனால், இந்த வகையில் கணவனை யிழந்த மனைவிமார்களைத்தான் காண முடிகிறதே யன்றி, மனைவியை யிழந்த கணவன்மார்களைக் காணமுடிவதில்லை. இதற்குக் காரணம் என்ன? மனைவியை யிழந்த கணவனுக்கு, வைதவ்யக் கட்டுப்பாடு இல்லை. அவன் தன் இஷ்டம்போல் வேறொரு பெண்ணை மணந்து, முன்னைய சுகத்தோடு வாழலாம். ஆனால், கணவனை யிழந்த மனைவியோ, சகல சுகங்களையுமிழந்து, தன் ஆயுட்காலம்வரை அவனையே நினைந்து, கைம்மை நோன்பு மேற்கொள்ள வேண்டும். இத் துன்ப வாழ்வின் சொல்லொணு வேதனையே, பெண்களை இத்தகைய தற்கொலைக்கு ஆளாக்கி விடுகின்றது!

எண்ணற்ற பெண்கள் இதுபோன்று எரி நெருப்பில் வெந்து சாம்பராகியும்—பலவகையில் தற்கொலை புரிந்து வந்தும், இவற்றைக்கண்ட ஆண்களின் உள்ளம் சிறிதும் இளகியதில்லை! அவ் விதவைக் கொடுமையைப் போக்க

முயன்றதில்லை! அந்த அளவுக்கு, ஆரியம் அவர்களை வன்னெஞ்ச முடையவராக—கன்மன முடையவராக ஆக்கி வைத்துவிட்டது! இதனால்தான் அப் பெருங்கோப் பெண்டு, 'கற்றீரேனும் உமக்கு அறிவில்லையே!' எனத், தன்னைத் தடுத்த அப்புலவனை நோக்கிக் கூறியிருக்கிறாள் போலும்!

இவ் விதவைக் கொடுமை நாட்டிவில்லாதிருப்பின்' இத்தகைய துன்ப நிகழ்ச்சிகள் தோன்றுதற் கிடனில்லை. ஆகையால், பெண்கள்மீது இரக்கமுள்ளவர்கள்—சீர்திருத்தத்தில் ஆர்வமுடையவர்கள், இக்கொடுங் கட்டுப்பாட்டை உடைத்தெறிய முன் வருவாராக.

இதனை வெளியிட முன்வந்த பூங்கொடிப் பதிப்பகத்தாருக்கு, எனது நன்றி!

புதுவை, S. சிவப்பிரகாசம்.
30-5-45

# வெளியிடுவோர் குறிப்பு.

தமிழாசிரியர் S. சிவப்பிரகாசம் அவர்களால் எழுதப்பட்ட 'கைம்மை வெறுத்த காரிகை' என்னும் இச் சிறு நூலை, எமது பதிப்பகத்தின் இரண்டாவது வெளியீடாக வெளியிடுகின்றோம். இதனை வெளியிடுவதற்கு, இரண்டே காரணங்களுள. ஒன்று: இதுபோன்ற நூற்களால், பழைய இலக்கியச் செய்யுட்களைச் சிறிது தமிழறிந்தோரும் படித்துணர்ந்து கொள்ள முடியும். மற்றொன்று: இதில் விதவை நிலை விளக்கப்பட்டுள்ளது. அக்கொடுமை நம் நாட்டுப் பெண்களை அலக்கழித்து வரும் நிலையறிந்து, அதனைத் தொலைக்க நாட்டினர் முயற்சிக்கவேண்டும் என்று வேண்டிக் கொள்வதே.

இது போன்ற கவிதை நூற்கள் பல உண்டாதல் வேண்டும், தமிழ் நாட்டில்—தமிழர் நலனுக்காக! அப்பணியிலீடுபடும் எமது முயற்சிக்குத், தக்க ஆதரவு அளிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

இதற்குச் சிறப்புரை எழுதித்தந்த தோழர் V. பொன்னம்பலம் அவர்கட்கும், அச்சியற்றித் தந்த இம்பீரியல் பிரஸ் சொந்தக்காரருக்கும் என் நன்றியுரியது.

புதுவை
1–6–45.

இங்ஙனம்,
பூங்கோடிப் பதிப்பக உரிமையாளர்.

# கைம்மை வெறுத்த காரிகை.

---

பூவுலகில் அறியாமை இருள்சூழ்ந் திட்ட
போழ்தில்,தன் அறிவொளியால் பிறநாட் டிற்கே
மேவுகலங் கரைவிளக்கம் போலே வாய்ந்த
மேன்மையுற்ற ஒருதனிநா டிருந்த துண்டு!
மூவரசர் ஆண்டவிடம்; அதுதான் நல்ல
முத்தமிழை வளர்த்தவிடம்! புலமை யார்ந்த
பாவரசர் பலராலும் புகழப் பெற்ற
பல்வளமும் நிறைந்தவிடம்! பெயர்தமிழ் நாடே!

அந்நாட்டு மூவரசில் ஒருவ ராக
அமைந்தவர்கள் பாண்டியர்கள்! அவர்தம் நாடாம்
எந்நாடும் போற்றுகின்ற பாண்டி நாட்டில்
இனிதான நல்லறங்கள் வளரச் செய்தே,
தந்நலத்தைக் கருதாமல் மக்கள் வாழ்வு
தழைத்தோங்கச் செங்கோல்ந டாத்தி வந்தார்.
செந்தமிழை வளர்த்தவொரு பெருமை யாவும்
சீர்ப் பாண்டியர்க்கன்றி மற்றோர்க் குண்டோ!

அவ்வழியில் வந்திட்ட மன்னன், நல்ல
அருந்தமிழிற் புலமையுளோன்; உணர்வு மிக்கோன்;
தெவ்வரெலாம் அஞ்சுகின்ற வீரம் பெற்றோன்;
சீரியநற் குணமுடையோன்; மக்கள் வாழ்வில்
வெவ்வியதோர் துன்பத்தை வீழ்த்த வந்த
மேன்மையுறு பூதப்பாண்டியனென் பேரோன்!
செவ்வியுடன் அவனுண்டான் பாண்டி நாட்டைச்
சீர்த்தமிழும் வளவாழ்வும் ஓங்கும் வண்ணம்!

அம்மன்னன் வாழ்வினுக்குத் துணையாய் வந்தோள்,
அருங்கலையில் தேர்ந்திட்ட புலமை சான்றோள்!
செம்மொழியாம் தனித்தமிழை ஆய்ந்து மக்கள்
செவிப் புலத்திற் கினியதொரு விருந்து செய்வோள்!
அம்புவியிற் காதல்வாழ் விலக்கணத்திற்
கிலக்கியமா யமைந்திட்டோள்! எழில் மிகுந்த
பைம்பொன்னை நிகர்க்கின்ற மேனி கொண்டோள்!
பகர்பெருங்கோப் பெண்டென்ற பெயரைப் பூண்டோள்!

தன்காதற் கணவனுடன் பெருங்கோப் பெண்டு
தணியாத அன்புடனே வாழ்ந்து வந்தாள்!
மன்பூதப் பாண்டியனும் அன்னாள் மட்டில்
வரையற்ற காதல்கொண் டொழுகி வந்தான்!

பொன்னாரும் உடலுயிரே போலும்-அன்றிற்
புட்போலும் இவ்விருவர் பிரித லின்றி,
ஒன்றாரும் மதிக்கின்ற வாழ்வு பெற்றார்
எனிலவரின் உயர்குணத்தை உரைப்பு துண்டோ?

பாண்டியனின் அவைக்களத்துப் புலவ ரான
பகர்மதுரைப் பேரால வாயார் என்னும்
மாண்புடையார், அரசிளமிற் பெருங்கோப் பெண்டின்
மனநிலையை வகைப்படுத்திக் கூறுங் காலை,
'சேண்மிக்க மன்னவனைப் பிரித லாற்றார்!
சிலநிமிடம் பிரிந்திடினும் தனதிளமை
வீண்படுதல் கண்டஞ்சிச் சோர்வார்!' என்று
விளம்புவதால் அவள் மேன்மை விளங்குமன்றோ?

ஒருசமயம் போருக்குச் செல்லுங் காலை,
'ஒன்னலரைப் புறங்காணே னாயின், இந்தத்
திருவிழியாள் தனைப்பிரிவேன்' என்று மன்னன்
சீற்றமொடு வஞ்சினமே சொன்னான் என்றால்,
பிரியாத அவருளமும், பிரிந்தால் வாழ்வு
பேணாத அவர் நிலையும் விளங்கு தற்குக்
கரியாகு மன்றோ அச் சொல்தான்? அன்னார்
கருத்தொருமை காணுதற்கு வேறென் வேண்டும்?

சரியொத்த கல்வியும் நல் அறிவும் பெற்றுச்
சந்ததமும் செவிக்கினிய விருந்தை யுண்டு,
வருபுலவர் மகிழ்ந்திடப் பொற் பரிச ளித்து
வளம்பெற்ற த்னித்தமிழை வளர்த்து, நல்ல
திருவிளைத்து நாட்டினிலே ஏழ்மை போக்கிச்
சீர்வாழ்வின் இன்பத்தைச் சமமாய்ப் பெற்றே
உரிமையுடன் வாழ்ந்திட்டார் வாழ்வினுக்கே
உயர்வழியைக் காட்டிட முன் வந்த அன்னார்!

இந்தவிதம் இவ்விருவர் வாழுங் காலை
இயல்பறியாக் காலமெனுங் கூற்றுவன்தான்,
சிந்தையினிற் பொறுமையுற்றோ என்னவோ அத்
திறல் வாய்ந்த மன்னவனின் ஆவிதன்னை
அந்தமுறும் அவன்மனைவி யறியா வண்ணம்
அனியாயமாய்க் கவர்ந்து சென்று விட்டான்!
வந்தவிருள் தனைவிலக்கும் விளக்கனையான்
மாண்டதற்கு வருந்தாத மாந்த ருண்டோ?

ஒருபுலவன் தனையிழந்தோம் என்றுசொல்லி
உயர்புலவர் தாமழுதார்! நாட்டுமக்கள்,
திருவிளைத்துச் செங்கோலால் மகிழ்ச்சி தந்த
சீர்மன்னன் தனையிழந்தோம் என்றழுதார்!

சரியொத்த துணையரசை இழந்தோமென்று
தமிழ் மன்னர் மற்றிருவர் அழுதார்! இந்த
இருநிலத்தில் வாழ்கின்ற மக்களெல்லாம்
இணைபிரியார் பிரிவெண்ணி இரங்கலுற்றார்!

வாழ்வினிலே இன்பத்தைப் பகிர்ந்தளித்தும்
வளம்பெற்ற தனித்தமிழால் விருந்தளித்தும்
சூழ்வுடைய துயரொன்றும் அணுகாவண்ணம்
சுதந்தரத்தை யளித்திட்ட காதல் மன்னன்,
ஆழ்வுற்றான் என அறிந்த பெருங்கோப் பெண்டோ
அங்கமெல்லாம் நடுநடுங்க உளந்துடிக்க,
வீழ்வுற்றான் மேல்விழுந்தே 'ஐயோ என்னை
விடுத்தாயோ' என்றலறிப் புலம்பலுற்றாள்!

கன்மலையும் கரைந்துருகும்! கடுவிஷங்கொள்
கரும் பாம்பும் நெஞ்சிளகும்! இரக்கமற்ற
வன்னெஞ்சக் கொலையுளமும் இரங்கும் அந்த
வஞ்சிபெருங் கோப்பெண்டின் அழுகை கண்டு!
நன்மொழியால் இதஞ்செய்து நாளும் வாழ்வில்
நலன்விளைத்த உயிரனையான் இறந்தபோது,
மென்மொழியாள் உளநிலையை உரைப்பதுண்டோ?
மெய்சோர்ந்தாள்! உணர்வற்றுத் தரைமேல் வீழ்ந்தாள்!

இறந்தார்க்குச் செய்கடனை முடிக்க வெண்ணி
இதுசமயம் முனைந்துவிட்டார் உறவோர் மற்றோர்!
திறல்வேந்தன் உடலத்தைப் பல்லக் கேற்றிச்
செய்கின்ற மரியாதை யாவுஞ் செய்து
புறப்பட்டார் சுடுகாடு நோக்கி! மக்கள்
புலன்மாற்றும் பிணப்பறைகள் முழக்கஞ் செய்ய,
இறந்தாரின் இறுதியிடம் நாடிப் பின்னர்
ஈமத்தீ மூட்டிவிட்டார் வேந்த னுக்கே!

முடிசூடி உலகாண்ட மன்ன ரேனும்
முடிவிலொரு பிடிசாம்ப லாவார் என்ற
படியோதும் பழமொழியின் படியே யிங்குப்
பாண்டியனின் சீருடலும் வேகா நிற்க,
துடிதுடித்துக் கீழ்வீழ்ந்த பெருங்கோப் பெண்டோ
சுயவுணர்வு வரப்பெற்றுப் புலம்பி யாங்குத்
தடவரைத்தோள் நாதனையே காணு ளாகித்
தலைமீதும் முகத்தினிலும் அறைந்து கொண்டாள்!

அந்தோ என் மன்னவனே! எனைப் பிரிய
ஆற்றாது வாழ்ந்தனையே! இன்றோ என்றன்
சிந்தைமிகத் துடிதுடிக்க உள மழியச்
செய்தென்னைப் பிரிந்தனையே! புலமை மிக்க

செந்திருவே உனை என்று காண்பேன்? ஐயோ
சீர்வாழ்வு சிதைந்ததுவே என்ன செய்வேன்!
வெந்தழலில் உன்தேகம் வேக, இங்கு
மென்மலர்போல் என்தேகம் விளங்க லாமோ?

தந்தையினை இழந்திடலாம்; தாயை மற்றும்
சகோதரரை யிழந்திடலாம்; வருந்திப் பெற்ற
மைந்தர்களை யிழந்திடலாம்; உறவாய் வந்த
மற்றவரை யிழந்திடலாம்; உவமை யுண்டு!
சொந்தமெனக் கைப்பிடித்த கணவன் தன்னைத்
துறந்திட்டால் மற்றொருவர் தம்மைக் காட்டி
அந்தவிதம் முறைசொல்ல முடிவ துண்டோ?
ஆருயிரே, என்துயர்க்கோர் எல்லை யுண்டோ?

அன்புடையார் தமைப்பிரிந்து வாழும் வாழ்வின்
அழற்புகுதல் நன்றென்பர் அறிஞர். மிக்க
துன்புடைய வைதவ்யக் கடலில் வீழ்ந்து
துடித்திடுதல் நான்சகியேன்! என்னை நாளும்
இன்புறுத்தி மகிழ்வித்த வேந்தால், நின்னை
இழந்ததன்பின் இவ்வுலகம் இனிப்ப துண்டோ?
அன்புடையாய், உனைப்பிரிந்து வாழேன்; வெய்ய
அழற்றீக்கே என்னுடலை அர்ப்ப ணிப்பேன்!

எனச்சொல்லி எழுந்திருந்தாள்; ஆவேசத்தால்
இம்மென்னும் நேரத்தில் ஈமஞ் சென்றாள்!
மனம்வெருண்டார் ஆங்குள்ளோர்;பெருங்கோப்பெண்டின்
மனநிலையை அறிந்துமிகத் துயரி லாழ்ந்தார்!
இனிச்சும்மா இருப்பதுவோ என்றே எண்ணி
எழிற்புலவர் மதுரைப்பே ரால வாயார்,
தனித் தமிழில் உயர்புலமை கொண்ட அந்தத்
தையல்முன் விரைந்தோடிச் சென்று ரைப்பார்.

" அரசரையாம் இழந்ததனாற் கண்ணிழந்த
அபலையைப்போல் ஆற்றொண்ணாத் துயரி லாழ்ந்தோம்!
சிரமற்ற உடலம்போல் பாண்டி நாடு
சீர்க்தலைமை இழந்திட்ட இந்நே ரத்தில்,
உரம்பெற்ற தமிழனையாய், நீயும் மாள
உறுதிகொளல் சரியாமோ? புலமையாலே
இருள்நீக்கி வாழவைப்போர் யாரே சொல்லாய்?
எம்முறையை மதித்துமனந் தணிக" என்றார்.

அவ்வார்த்தை கேட்டவுடன், பெருங்கோப் பெண்டின்
அங்கமெலாம் கோபத் தீ எழ உரைப்பாள்:
வெவ்வியதோர் மொழிபுகன்றீர்! கற்றீ ரேனும்
வெள்ளறிவைக் காட்டிவிட்டீர்! என்றன் உள்ளச்

செவ்வியறிந் தெனைமேலும் ஊக்கி டாமல்
தீப்புகுதல் தீதென்றீர்! உயிர்பி ரிந்த
இவ்வுடலம் இனி எதற்கு? மதியி ழந்தே
இப்படியும் உரைத்திடுதல் புலமை யாமோ?

உலகத்தில் உழல்கின்ற கொடுமை யாவும்
ஒருருவாய்த் திரண்டதெனில், அதுதான் மாதர்
நலனழித்துச் சீரழிக்கும் விதவை யென்னும்
நஞ்சன்றி வேறுண்டோ? அதனை யுண்டோர்,
பலர்பழிக்கும் ஆளாகா திருப்ப துண்டோ?
பல்சுவையூண் உடையுண்டோ? அணிக ளுண்டோ?
கலைசீவி முடிப்பதுண்டோ? திலத முண்டோ?
சாற்றிடுநற் சுகவாழ்வு பெறுவ துண்டோ?

நாளுக்கோர் வேளையெனப் பழஞ்சோற் றோடு
நறுநெய்யு மில்லாமல் வெள்ளெள் சேர்த்த
வேளைக்கீ ரையதனில் புளியை விட்டு
வேகவைத்த வலுவழிக்கும் உணவை யுண்டு,
வாளியைப்போல் தைத்துமிக வருத்து கின்ற
மணற்படுக்கை யின்மீது பாயு மின்றி,
நாளெல்லாம் துயர்க்கடலில் ஆழ்ந்து துஞ்சும்
நங்கையரென் றெனையெண்ணி விட்டீரோ நீர்?

பெருவிறகை யடுக்கிமிகு தீயை மூட்டும்
பிணப்படுக்கை நுமக்கெல்லாம் அரிதே யாகும்!
திருவனையான்-உயிரனையான் மாய்ந்த பின்னர்ச்
சீரிழக்கும் எனக்கோ இவ் வீமத் தீயும்,
அரும்பலர்ந்த தாமரைசேர் குளிர்நீர் கொண்ட
ஆழ்குளமும் ஒன்றாகும்! என்று சொல்லி,
எரியோங்கும் ஈமத்திற் பாய்ந்தாள் அந்த
எழிலுருவாய் வந்திட்ட பெருங்கோப் பெண்டு!

திடுக்கிட்டார் ஆங்குள்ளோர் தடுப்ப தற்குள்
தீக்குளித்த அரசியவள் வீரங் கண்டு!
நடுக்குற்றார் அறிவார்ந்த புலவர் தம்மை
நாமிழக்க நேர்ந்ததையோ என்று சொல்லி,
விடுத்திட்டார் கண்ணீரை வெள்ளம் போலே!
வியப்புற்றார் தமிழ்க்காதல் வன்மை எண்ணி!
படப்பிடிப்பாம் அந்நிகழ்ச்சி தனைவி ளக்கும்
பாவதனை ஈங்குரைப்பேன் படித்தோர் வீரே!

ஃ ஃ ஃ

"பல்சான் றீரே! பல்சான் றீரே!
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே!
அணில் வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட

காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டா (து)
அடை-யிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரே மல்லே மாதோ!
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல! எமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென, அரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே’’

(புறம்–246.)

பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது.]





